குழகன், குறிஞ்சிவேந்தன், குமரன், குன்றெறிந் தோன், கௌரிநந்தனன், சண்முகன், சரவணபவன். சிலம்பன், சுரேசன், சூர்ப்பகைவன், செட்டி, செவ் வேள், சேந்தன், சேய், சேவற்கொடியோன், தார கற்செற்றேன், தாரகாரி, தெய்வயானைகாந்தன், தேவ சேனபதி, பாவகி, மஞ்ஞையூர்தி, மாயோன்மருகன், முருகன், முருகு, வரைபகவெறிந்தோன், வள்ளிமண ளன், வாகுலேயன், விசாகன், வேலன், வேலிறை வன், வேள், அக்கினிகருப்பன், கதிரையீசன், சங்கத் தலைவன், சாமி, முத்தையன் என்னுநாமங்களுண்டா தற்குக் காரணங்கள் யாவை?

தரு.—அந்நாமங்கட்கு வாச்சியார்த்தமும் இலக்ஷி யார்த்தமுமுள. யாம் முன்னருரைப்பது வாச்சியார்த் மென்றும், பின்னருரைப்பது இலக்ஷியார்த்தமென்றும் நீ கண்டுகொளற்கு, ஈண்டு ஒரோவொன்ருக வினவுதி.

(கo)

சீட.—அரன்மகன் என்பதற் கருத்தமென்னை?

தரு.—ஹரன் எனும் வடசொல், (பாப) நாசன், சங் காரகருத்தாவெனப் பொருளாம். அந்தப் பாபநாசனும் எப்பொருட்கு மிறைவரானவர், மகனும் அழல்விழித் தேஜசுகட்குக் காரணமாயிருத்தலிற் பிதாவெனவாவர். அம்முறைமையிற் பரம்பொருள், அரன்மகனெனப் படுவ தாயிற்று.

ஹரனென்பது, பாவ ஏதுவாம் மலங்களைப் பரி கரித்தருள்பவனெனப் பொருளாதலின் அவன் கேடற்ற மங்களனெனவுமாவன். அந்த மங்களமே மோக்கமாகிய சிவமென்றும், அச்சிவமாக விருப்பவன் சிவனென்றும்